## உணவு:-

(1) மாகாண உணவு பற்றாக்குறை சரி செய்யப்பட்டு, உணவு கூப்பு ஏற்படுத்தப்படும் வரை மாகாண முழுதும் சட்ட பூர்வமான ரேஷன் ஏற்படுத்தல். (2) ரேஷன் அளவை படிப்படியாக 16 அவுன்ஸ்க்கு உயர்த்தல். உடனடியாக 12 அவுன்ஸாக ஆக்குவது. (3) கிராம மக்கள் கமிட்டிகளின் ஒத்துழைப்புடன் வியாபாரிகளிடம் கொள்முதல். 16 அவுன்ஸ் அடிப்படையில் குடும்ப தேவையையும், விவசாய செலவுக்குமான தானியம் போக மீத நெல்லை பணக்கார விவசாயிகளிடம் கொள்முதல் செய்தல். ஏழை விவசாயிகளிடம் கொள்முதல் கிடையாது. நடுத்தர விவசாயிகளைப் பொறுத்தவரை, அவர்கள் மீதப்படுத்தி எவ்வளவு நன்கொடையாக அளிக்கிறார்களோ அதை கிராம மக்கள் கமிட்டிகளின் ஒத்துழைப்புடன் சேகரித்தல். அடுத்த ஆண்டு முதல் கொள்முதல் களத்திலேயே செய்யும் வகையில் ஏற்படுத்துவது. அதன் மேலும், பதுக்கலை ஒழித்து தான்யத்தைப் பாதுகாப்பது. (4) விளையும் பொருள்களை அளிப்பதற்கு பதிலாக கொள்முதல் விலைக்கேற்றபடி பணமாக விவசாய வாரம், குத்தகையை செலுத்த வகை செய்யும் முறையில் சட்டம் செய்யப்படும். (5) மக்கள் ஸ்தாபனங்களின் ஒத்துழைப்புடன், கள்ள மார்கெட், பதுக்கல் ஒழிப்பு நடவடிக்கைகள் மேற் கொள்ளப்படும். (6) பர்மாவிலிருந்தும், சீனாவிலிருந்தும் அரிசி இறக்குமதி செய்வதன் மேலும் பற்றாக்குறையை சமாளித்தல்.

## தொழில், வர்த்தகம், தொழிலாளர்:-

(1) கைத்தறியாளர்களின் தேவை பூர்த்தியானது போக மீதமிருக்கும் நூலைத்தான் இம்மாகாணத்திலிருந்து ஏற்றுமதி செய்ய அனுமதிக்கப்படும். (2) கைத்தறியாளர் கூட்டுறவு ஸ்தாபனங்களின் மூலம் பங்கீட்டு முறைப்படி கைத்தறிக் காரர்களுக்கு நூல் விநியோகிக்கப்படும். (3) தொழிலதிபர்களுக்கு நியாயமான லாபத்திற்கு பாதகம் இல்லாமல் விலை குறைப்பு செய்வதற்காக துணி-நூல் விலைவாசிகளை பரிசீலனை செய்வது. (4) சாதாரண தொழில்களுக்கும் குடிசைத் தொழில்களுக்கும் விசேஷ கடன் வசதியளித்தல், கச்சா பொருள்களை கிடைக்கச் செய்வதும் அதேபோல் உற்பத்தி செய்த பொருள்களை விற்பனை செய்வதிலும் அவற்றிற்கு உதவி அளிக்கப்படும். (5) கச்சாப் பொருள்கள் உற்பத்தி பண்டங்கள் போக்குவரத்திற்கு ரயில் லாரி வசதிகள் உத்தரவாதமளிக்கப்படும். (6) தொழில், வர்த்தகம், ஆகியவற்றின் மீதுள்ள விற்பனை வரி, இதர வரிகளை ரத்து செய்தல்; உடனடியாக அவற்றைக் குறைத்தல்; வருமானத்தின் அடிப்படையில் வரி வசூல் அமுல் செய்தல். (7) வாழ்க்கைப் பண்டங்களின் உள்ள கள்ள மார்க்கெட்டுக்கெதிராக ஸ்தாபன ரீதியான நடவடிக்கை எடுத்தல் (8) வர்த்தகத்தின் கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு ஆக்கம் அளித்தல் (9) மாகாணத்தை தொழில்மயமாக்குவதிலும், மின்சார வசதிகளைப் பெருக்குவதிலும் குறைந்தபட்ச குறிக்கோள்கள் நிர்ணயிக்க சர்க்கார்-தொழிலதிபர்-தொழிலாளர் ஆகிய பிரதிநிதிகளையும் கொண்ட மகாநாட்டைக் கூட்டுதல். (10) வாழ்க்கைக்குப் போதிய சம்பளம் அளிப்பது தொழிலின் முதற் பொறுப்பு என்று ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது உடனடியாக அமுல் செய்ய வேண்டும். குறைந்தபட்ச அடிப்படையில் சம்பளம் ஒரு தொழிலாளிக்கு ரூ 30 ஆக உடனடியாக அளிக்கப்படுதல். அதன் அடிப்படையில் எல்லாத் தொழிலாளர்க்கும் மத்தியதர உத்தியோகஸ்தர்க்கும் வேலை சம்பள விகிதங்கள் நிர்ணயித்தல், வேலை உத்திரவாதம். பழிவாங்கப்பட்ட, ஆட்குறைப்பு செய்யப்பட்ட சகல தொழிலாளர் இப்பந்திகளும் வேலைக்கு எடுத்துக் கொள்ளச் செய்தல், வேலையளவை விஞ்ஞான ரீதியாக நிர்ணயித்தல். ஆண் பெண் பேதமின்றி சம வேலைக்கு சம அளவு சம்பளம். 4 மாதம் சம்பளத்துடன் விடுமுறை பெண்களுக்கு பிரசவ காலத்தில் அளித்தல். (11) கட்டாய மத்யஸ்த விதிகள் அமுல் செய்யப்படமாட்டாது. ஸ்தாபனம் கட்டும் உரிமை, கூட்டான முறையில் பேச்சு வார்த்தைகள் நடத்தும் உரிமை, வேலை நிறுத்தம் செய்யும் உரிமை, தொழிலாளருக்கு பூரணமாக வழங்கப்படும். இவற்றுக்கு விரோதமான எல்லா ஸ்டாண்டிங் ஆர்டர்களும் ரத்து செய்யப்படும். (12) அரசாங்கத்திற்கு சொந்தமானதாக அரசாங்கத்தில் நிர்வகிக்கப்படக்கூடிய தொழில்களின் நிர்வாகத்தில் பங்கு கொள்ள தொழிற்சங்கங்களுக்கு உரிமையுண்டு. தொழிலதிபர்களுக்கு நியாயமான லாபம், தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்கு போதிய